# கல்கத்தா தேசிய நூலகத் தமிழ்ச் சுவடிகள்

புலவர் மு. சண்முகம் பிள்ளை
டாக்டர் இ. சுந்தரமூர்த்தி

சென்னைப் பல்கலைக் கழகம்

1979

# கல்கத்தா தேசிய நூலகத் தமிழ்ச் சுவடிகள்



புலவர் மு. சண்முகம் பிள்ளை
டாக்டர் இ. சுந்தரமூர்த்தி

சென்னைப் பல்கலைக் கழகம்

1979

# முன்னுரை

பண்டைத் தமிழ்ச் சுவடிகளைக் கால வெள்ளத்திற்கு இரையாக்காமல் பாதுகாத்திருந்தால் தமிழ் இலக்கிய வரலாறு இன்னும் முழுமை பெற்றிருக்கக் கூடும். காலந்தோறும் நெருப்பிலும் நீரிலும் அழிந்தொழிந்த தமிழ் இலக்கிய, இலக்கண மருத்துவ, சோதிடச் சுவடிகள் மிகப் பலவாகும். அழிவினின்றும் தப்பிய தமிழ்ச் சுவடிகள் பலவும் இன்று தமிழகத்தை விட்டுத் தொலைவில் வெளிநாட்டு நூலகங்களில் உள்ளன. வெளிநாட்டு அரசு நூலகங்களில் உள்ள சுவடிகளைத் தக்கவாறு பயன்படுத்தித் தமிழ்ச் செல்வத்தை உலகுக்குணர்த்தும் பணி விரைவில் செய்ய வேண்டிய ஒன்ருகும்.

பாரிசு, லண்டன், ரோம், லிஸ்பன், ஹோப்பன் ஹாகன் முதலிய வெளிநாட்டு நகர நூலகங்களில் காணப்படும் தமிழ் ஏட்டுச் சுவடிகளின் விவரப் பட்டியல்களையும், தமிழகத்தில் உள்ள அனைத்து ஏட்டுச் சுவடிகளையும் ஒன்ருகத் திரட்டி அவற்றிற்குரிய விவரப்பட்டியல்களையும் தொகுத்து வெளியிடுவதே முதற்பணியாகக் கொள்ள வேண்டும். இதற்கு முன்னரும் சுவடிகள் பற்றிய தொகுப்பு விவரங்கள் சில வெளிவந்துள்ளன. ஆனுல் உலக முழுவதும் கிடைக்கும் தமிழ்ச் சுவடிகளின் விவரப் பட்டியல் இன்னும் தொகுக்கப் பெறவில்லை. அத்தகைய தொகுப்பு நூல் தமிழாராய்ச்சிக்குப் புதிய கருவூலங்களைத் தரும் என்பதில் ஐயமில்லை.

அவ்வகையில் இந்நூல், கல்கத்தாவில் உள்ள தேசிய நூலகத் தமிழ்ச் சுவடிகள் பற்றிய விவரங்களைத் தொகுத்தளிக்கின்றது. இவ் ஏட்டுச் சுவடிகள் அனைத்தும் **பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை** அவர்கள் பல்வேறிடங்களில் முயன்று தொகுத்ததாகும். அவர் மறைவுக்குப் பின்னர் அவர்தம் குடும்பத்தினர் இச்சுவடிகளை இந்நூலகத்திற்கு நன்கொடையாக வழங்கினர்.

பல ஆண்டுகளுக்குப் பின்னர் இச்சுவடி பற்றிய விவரம் தமிழாராய்ச்சி உலகுக்குக் கிடைக்கின்றது. 'திவாகரம் ஆய்வு' தொடர்பாக நாங்கள் கல்கத்தா நூலகத்திற்கு 1979 ஜூன் திங்களில் சென்ற போது இச் சுவடிகளை ஆராயும் வாய்ப்பு ஏற்பட்டது. பேராசிரியருடைய ஏட்டுச் சுவடிகள் வகைப்படுத்தப் படாமல் இருந்தன. அவற்றை யெடுத்து இதுவரை யாரும் பயன்படுத்தி யதாகவும் தெரியவில்லை. திவாகரச் சுவடிகள் இத் தொகுப்பில் மறைந்து கிடந்தன. திவாகர ஏடுகளைத் தேடும்போது எல்லா

ஏடுகளையும் பார்வையிட்டு விவரக் குறிப்புகள் தந்து வகைப் படுத்துமாறு நூலகத்தினர் வேண்டிக் கொண்டனர். எங்களுக்குக் கிடைத்த குறைவான காலச் சூழலில் ஓரளவு அனைத்து ஏடுகளையும் ஆராய்ந்து சுருக்கமான விவரங்களையும் தந்துள்ளோம். தனித் தனியாக ஒவ்வொரு ஏட்டையும் கூர்ந்து ஆராய்ந்தால் மேன்மேலும் பல புதிய செய்திகள் கிடைக்கக் கூடும். ஆய்வுலகம் இவ் அரிய சுவடிகளைப் பயன்படுத்திக் கொள்ள இத் தொகுப்புநூல் துணைபுரியும் என நம்புகிறோம்.

தேசிய நூலக ஏட்டுச் சுவடிகளைக் குறித்து ஆராய்வதற்குப் பல பெருமக்கள் துணைநின்றனர். தமிழ்நூல் விவரப் பட்டியலைத் தொகுத்து வெளியிட்டுவரும் திரு. பி. நா. வேங்கடாச்சாரியார், தேசிய நூலகப் பொறுப்பாளர்களில் ஒருவரான திரு. நாகராஜன், தேசிய நூலகத்தின் தமிழ்ப் பகுதிப் பொறுப்பில் பணியாற்றும் திருமதி புஷ்பவேணி கோபி, துணை நூலகர்கள் திரு. பாலசுப்பிர மணியன், செல்வி சத்தியபாமா, மற்றும் நண்பர்கள் திரு. மகாலிங்கம், தமிழாசிரியர் புலவர் திரு. ஜெக. சீனிவாசன், திரு. பாலகிருஷ்ணன், திரு. நாராயணன், திரு. டி. டி சாரி, திரு. பழநியப்பன் ஆகியோர் எங்கட்குப் பெரிதும் துணைபுரிந்தனர். இவர்கட்கு எங்கள் நன்றி என்றும் உரியது. இத்தமிழ்ப் புதையலைக் கண்டு ஆய்வுலகுக்கு வெளிப்படுத்தத் துணை நின்ற நூலகப் பொறுப்பாளர்கள், நண்பர்கள் அனைவருக்கும் நன்றி.

ஏட்டுச் சுவடிகள் பற்றிய செய்தியைக் கூறியதும் தமிழாய்வில் வெளியிடப் பெரிதும் ஊக்கம் தந்துதவிய தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் அவர்கட்கு நன்றி உரியது.

எல்லாவற்றிற்கும் மேலாகத் தமிழ், அறிவியல் ஆகியவற்றை நாளும் போற்றிப் புரக்கும் சென்னைப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் பெருந்தகை பேராசிரியர் டாக்டர் ஜி ஆர். தாமோதரன் அவர்கள் இதனைத் தனி நூலாக வெளியிட வாய்ப்பளித்தார்கள். துணை வேந்தர் பெருந்தகை அவர்கட்கும், பல்கலைக்கழகத்தார்க்கும் தமிழுலகத்தின் நன்றி என்றும் உரியது.

இத் தொகுப்பு நூல் தமிழாய்வுக்கும் வளர்ச்சிக்கும் பெருந்துணை புரியும் என்று நம்புகிறோம்.

*மு. சண்முகம்பிள்ளை*

*இ. சுந்தரமூர்த்தி*

# கல்கத்தா
# தேசிய நூலகம்
# தமிழ் ஓலைச் சுவடிகள்



பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை
அவர்கள்

தொகுத்த
இச் சுவடிகளை
அவர்தம் குடும்பத்தினர்
1960ஆம் ஆண்டில்
இந் நூலகத்திற்கு நன்கொடையாக
வழங்கினர்.

# பொருளடக்கம்

# ஆய்வுரை

நம் பாரத நாட்டுத் தேசிய நூலகம் (National Library) வங்க நாட்டுத் தலைநகராகிய கல்கத்தாப் பெருநகரில் உள்ளது. இது நம் பாரத நாட்டுள்ள நூலகங்கள் எல்லாவற்றிலும் மிகப் பெரியது. நம் தாய்நாடு சுதந்திரம் பெற்ற அடுத்த ஆண்டிலேயே, அதாவது 1948-இல் தொடங்கப் பெற்றது இந்நூலகம். நம் நாட்டிலுள்ள தேசிய மொழிகளில் வெளிவரும் நூல்களும், ஆங்கிலம், பிரஞ்சு முதலிய உலகம் அளாவப் பரந்த மொழிகளில் உள்ள நூல்களும் இங்கு இடம் பெற்றுள்ளன.

1954ஆம் ஆண்டு ஏற்பட்ட நூலகச் சட்டத்தின்படி நம் நாட்டில் அச்சிடப் பெறும் எந்த நூலுக்கும் உரிய ஒரு பிரதி இந்த நூலகத்திற்கு அனுப்பிவைத்தாக வேண்டும். ஆதலால், பாரத நாட்டிலுள்ள எல்லா மொழி நூல்களும் நாள்தோறும் இங்கு வந்து குவிந்தவண்ணமாயுள்ளன. இவற்றை எல்லாம் முறைப் படுத்தித் தொகுத்து, 'இந்திய தேசிய நூல் விவரப் பட்டியலை'யும் (Indian National Bibliography) ரோமன் எழுத்தில் பருவம் தோறும்-ஆண்டு தோறும் வெளியிட்டு வருகிறார்கள். எனவே, இந்த நூல் விவரப்பட்டியல் தேசிய மொழி நூல்களின் வரலாற்றுக் களஞ்சிய மாகத் திகழ்ந்து வருகின்றது.

இந்த நூலகம் தொடங்கிய காலத்தில் (1948) இங்குத் தமிழ் நூல்கள் மிகமிகக் குறைந்த அளவில் தான் இருந்தன. அப்பொழுது தமிழ்ப்பகுதியின் பொறுப்பாளராயிருந்த திரு. பி. நா. வேங்கடாச் சாரியார் அவர்கள் தமிழ்ப் பகுதியை விரிவாக்குவதற்கு அயராது பாடுபட்டு வந்தார். தமிழகத்தில் நூல்களைச் சேர்த்து வைத்திருந்த அன்பர்கள் பலரிடமிருந்து பழம் பதிப்புகள் முதலியவற்றை யெல்லாம் விலைகொடுத்துப் பெற்று இங்குக் கொண்டு வந்து சேர்த்தார். நன்கொடையாகவும் சிலரிடமிருந்து நூல்களை இந் நூலகத்திற்குப் பெற்றனர். இவருடைய பெருமுயற்சியால் 1956-ல் மறைந்த பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் சேர்த்து வைத்திருந்த 4500-க்கு மேற்பட்ட நூல்கள் அவருடைய கால் வழியினரிடமிருந்து 1960ஆம் ஆண்டு நன்கொடையாக நூலகத் திற்கு வந்து சேர்ந்தன. இவற்றில் தமிழ் நூல்கள் 2943; ஆங்கிலம், பிரஞ்சு, ஜெர்மன் மொழி நூல்கள் 1543; சமஸ்கிருதம் 113; மலையாளம் 16.

பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்களின் அச்சு நூல்களின் தொகுப்பேயன்றிப் பேராசிரியர் சேர்த்து வைத்திருந்த 340-க்கு மேற்பட்ட ஓலைச் சுவடிகளும் இந்நூலகத்திற்கு நன்கொடையாகத் தரப்பட்டன. தேசிய நூலகத்தில் உள்ள தமிழ் ஓலைச் சுவடிகள் முழுமையும் பேராசிரியரின் தொகுப்புகளேயாம். இச்சுவடிகளைப் பாதுகாப்பான முறையில் அங்கு வைத்துள்ளனர் என்றாலும், அவை யெல்லாம் பயன்படுத்துவதற்கு ஏற்ற முறையில் வகைப்படுத்தி வைக்கப் பெருமல் இருந்தன. அவற்றைக் கண்காட்சி போலக் கண்டு வந்தவர் சிலர்; அவற்றைப் பயன்படுத்தியவர் மிகமிக அரியர்.

பல்கலைக்கழக நிதி உதவியுடன் 'திவாகரம்' ஆய்வுப்பதிப்பு உருவாக்கும் பணியில் நாங்கள் ஈடுபட்டிருந்தபோது, பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்களின் தொகுப்பில் உள்ள திவாகரச் சுவடிகளை ஆராய்வதற்காக 1979 ஆம் ஆண்டு ஜூன் மாதம் நாங்கள் கல்கத்தா தேசிய நூலகத்திற்குச் சென்று மூன்று வாரம் பணி செய்தோம். திவாகரத்திற்கு 27 சுவடிகள் அங்கு இருந்தன. அவற்றை ஆராய்ந்ததில் ஏற்கெனவே இருந்த பல ஐயங்கள் நீங்கியதோடு நல்ல பல குறிப்புகளும் அவற்றில் காணப்பட்டன.

திவாகரப் பணிக்கு நாங்கள் சென்ற சமயம் ஏனைய ஏடுகளையும் இனம் பிரித்து விவரம் குறித்துத்தரத் தமிழ்ப்பகுதிப் பொறுப்பாளர் திருமதி புஷ்பவேணி கோபி அவர்களும், நூல் விவரத் தொகுப்புப் பகுதி திரு. பி. நா. வேங்கடாசாரியரும், நூலகரும் கேட்டுக் கொண்டார்கள். அவர்கள் குறிப்பிட்ட வண்ணமே திவாகரச் சுவடிகளோடு ஏனைய சுவடிகளுக்கும் விவரம் எழுதித் தொகுத்துத் தந்தோம்.

கம்பராமாயண ஏடுகளை (77) முற்றுமாய்ப் பார்ப்பதற்கு எங்களுக்குக் காலம் போதவில்லை. 34 சுவடிகளுக்கே குறிப்புகள் தொகுக்க இயன்றது. ஏனைய ஏடுகளைப் பார்வையிட்டுக் கல்கத்தா தேசிய உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் திரு. ஜெக. சீனிவாசன் அவர்கள் பின்பு தொகுத்தார்கள். அவர் தொகுத்த 43 ஏடுகளின் விவரமும் அவருடைய முயற்சியால் எங்களுக்குக் கிட்டியது. இவை தவிரக் கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளில் அமைந்த ஆறு ஏடுகளின் விவரம் தெரியவரவில்லை.

தேசிய நூலகத்தில் உள்ள தமிழ்ச் சுவடி விவரங்கள் தமிழாய் வாளர்களுக்குப் பயன்படத் தக்கவை. எனவே, அவற்றைத் தமிழ்த்துறை வெளியிடும் தமிழாய்வு—10ஆம் தொகுதியில் வெளியிடலானோம். மேலும், இதனைத் தனிநூலாகவும் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது போற்றத்தக்கதாகும்.

## நிகண்டு, அகராதி

தேசிய நூலகத்தில் ஏட்டுச் சுவடியாயுள்ள நூல்கள் எவையெவை என்பதை இனி நோக்குவோம்; திவாகரச் சுவடிகள்

27; பிங்கலம் முதலிய ஏனைய நிகண்டுகள் 38. இந்நிகண்டுச் சுவடிகள் 65-ல் பல்பொருட் சூளாமணி, விரிவுநிகண்டு ஆகியவை இன்னும் அச்சிடப் பெறுதவை. அச்சிட்ட ஏனைய நிகண்டுகளையும் செம்மையாகப் பதிப்பிப்பதற்கு இங்குள்ள சுவடிகள் பெரிதும் பயன் படும்.

பழமொழித் தொகுப்பு, அகராதித் தொகுப்புகளும் பல உள. பழமொழித் தொகுப்பில் 'விகடப் பிரசங்கப் பழமொழி' என்பது தனிநோக்கில் அமைந்த ஓர் அகராதி முறைச்சுவடி. இதுவும் இது வரை அச்சில் வாராத ஒன்ருகும்.

அகராதிச் சுவடிகளுள் (7) சில வீரமாமுனிவரின் சதுரகராதிச் சுவடிகளேயாம். 67, 68 ஆம் எண்ணிடப் பெற்ற சுவடிகள் அதனின் வேறுபட்ட ஒன்ருகும். இவற்றை நன்கு பரிசோதித்தால் தான் இவற்றின் பயன்பாடுபற்றி மதிப்பிட இயலும். 71 ஆம் எண்ணுள்ள சுவடியும் புதுமையாயுள்ளது.

## இலக்கணம், சங்கநூல்கள், திருக்குறள்

தொல்காப்பியம் முதலிய இலக்கணநூல் சுவடிகளின் விவரங்களை 73 முதல் 109 வரையில் காணலாம். சங்க இலக்கியச் சுவடிகள் சிலவே (110-114). பதினெண் கீழ்க்கணக்குச் சுவடிகளுள் (115-135) திருக்குறளுக்கே மிகுதியான ஏடுகள் உள. 115 முதல் 118 வரையில் உள்ள நான்கு ஏடுகளும் திருக்குறள் பரிமேலழகர் உரையேடுகள், 119, 121ஆம் எண் உள்ள ஏடுகள் திருக்குறள் பரிமேலழகர் உரையை ஒட்டி அமைந்த எளிய உரையேடுகளாகும். 125 ஆம் எண்ணுள்ள ஏடு 1812 ஆம் ஆண்டில் வெளிவந்த திருக்குறள் மூலப் பதிப்புப் பற்றிய பாடபேத ஆராய்ச்சி ஏடு ஆகும்.

திருக்குறள் விளக்கமாய் அமைந்த நூல்கள், 'திருவேங்கட வெண்பா' (123) 'திருக்குறள் திருவிருத்தம்' என்பனவாம். இவையும் இதுவரை அச்சானதாகத் தெரியவில்லை. நாலடியார் (128-130), பழமொழி (131) நான்மணிக்கடிகை முதலிய நூல்களுக்குப் பழைய உரையுடன் கூடிய ஏடுகள் உள்ளன (132-135).

'மாதர் நீதி' (139) நூல் 36 ஆம் எண் ஏடாகிய உரிச்சொல் நிகண்டு போல அச்சுப் புத்தகத்தைப் பார்த்து எழுதிவைத்த சுவடி யாகும். சிலப்பதிகாரம், சிந்தாமணி, சூளாமணிக் காவிய ஏடுகளும் (140-146, 167-169, 171–172) காணப்படுகின்றன.

## பிற நூல்கள்

தேவாரம், திவ்வியப் பிரபந்தம், திருவாசகம், திருவிசைப்பா என்னும் பக்திப் பனுவல் ஏடுகளும் பல உள (147-157). அருணகிரி நாதர் திருவகுப்பு, அருணசலக் கவிராயர் இராம நாடகம், முத்துத் தாண்டவர் கீர்த்தனை, வைகுண்ட அம்மானை, கோவலன் கதை போன்ற சில்லறை நூல்களின் ஏடுகளும் பலவாம். (158-163, 170) சேக்கிழார் பெரியபுராணம் முழுமையாயுள்ளது (113); வில்லி புத்தூரரின் பாரத ஏடு ஒன்றும் உள்ளது (174). செவ்வைச் சூடுவார்

பாகவத ஏடும் காணப்படுகிறது. பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடலுக்கு ஆறு ஏடுகள் உள (176–181). நைடத ஏடு ஒன்றும் (183), நளவெண்பா ஏடுகள் இரண்டும் (184-185) காணப் படுகின்றன.

சிவஞான போதம் முதலான மெய்கண்ட நூல்களின் ஏடுகள் சிலவும் உள (188-189). சிவதருமோத்தரம் (190), இருசமய விளக்கம் (192) நானுசீவ வாதக் கட்டளை (193), ஞானவாசிட்டம் (194) முதலான தத்துவ நூல் ஏடுகளும் உள.

அபிராமி அந்தாதி, திருவேங்கடத் தந்தாதி, குற்றலக் கலித்துறை முதலான சிறு பிரபந்த ஏடுகளும் பலவாக உள்ளன. (195-245), இவற்றுள் சில பிரபந்தங்கள் அச்சிடப்பெருதன வாகலாம்.

பரதசாத்திரம், சோதிடம், கணக்கதிகாரம் போன்ற சாத்திர ஏடுகளும் இடம் பெற்றுள்ளன (246-254). பகவத் கீதை வசனம் என்னும் உரையேடும் உண்டு (255). சமண சமய நூலாகிய ஜீவஸம் போதனைக்கு இரண்டு ஏடுகள் உள்ளன (257-258).

## கம்பராமாயணம்

கம்பராமாயணத்திற்கு அமைந்துள்ள ஏடுகள் 77. இவற்றின் விவரங்கள் ஒரு சேர இறுதிப் பகுதியாய் அமைத்துத் தரப்பட்டுள்ளது. இவற்றுள் எல்லாக் காண்டங்களும் கொண்ட ஏடுகள் சிலவே; தனித்தனிக் காண்ட ஏடுகளும், இரண்டு மூன்று காண்டங்களாக இணைந்து அமைந்த ஏடுகளும் பல. இவற்றை நூலடைவில் தெளிவுறக் காணலாம்.

அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் பல ஏடுகளை ஒப்பு நோக்கிக் கம்பராமாயணப் பதிப்புக் கொண்டு வந்துள்ளார்கள். அவர்களாலும் பயன்படுத்தப் படாதவை இங்குள்ள ஏடுகள். இவற்றுள் பெரும்பாலனவும் திருநெல்வேலி, நாஞ்சில் நாட்டுப் பிரதேசங்களிலிருந்து திரட்டப் பெற்றனவாகும். ஆழ்வார் திருநகரி முதலிய திருப்பதிகளில் கற்று வல்ல வித்துவான்களால் எழுதப்பட்ட ஏடுகளும் இவற்றில் உள. கம்பராமாயண ஆய்வாளர்கள் இங்குள்ள ஏடுகளையும் பயன்படுத்தி ஆராய்வார்களானுல் செம்மையான நல்ல பல பாடங்கள் கிட்டுதல் கூடும்.

## பழமையான ஏடுகள்

இங்குள்ள ஏடுகளுள் ஏறத்தாழ 400 ஆண்டுகளுக்கு முற்பட்ட ஏடுகளும் உள. சீவக சிந்தாமணிக் காவியத்திற்கு நச்சினுர்க்கினியர் உரையுடன் கூடிய ஏடு 1611-ல் எழுதப்பட்டதாகும். 1682ல் எழுதப் பட்ட நன்னூல் விருத்தியுரை ஏடும், 1702-ல் எழுதப்பட்ட திவாகர ஏடுகளும் பழமையான ஏடுகளுள் குறிப்பிடத்தக்கனவாம்.

## பாடபேத ஆராய்ச்சி

திருவள்ளுவர் குறள், திருவள்ளுவமாலை, நாலடியார் என்னும் பெயரில் அமைந்த ஏடு (எண் 125) ஓர் ஆராய்ச்சியுரை ஏடாகும். கி. பி. 1812ல் மேலே சுட்டிய பெயரில் நூல் அச்சாகியுள்ளது. இந்த அச்சு நூலைக் குறித்து,

> 'இது பொத்தகம் கலியுகாப்தம் 4900க்கு ஆங்கிரீச ஸ்ரீ தொண்டை மண்டலம் சென்னைப் பட்டணத்தில் தஞ்சை நகரம் மலையப்ப பிள்ளை குமாரன் ஞானப் பிரகாசனால் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது. மாசமதினச் சரிதையின் அச்சுக்கூடம். ஆண்டு 1812"

என்று விவரம் குறிக்கப்பட்டுள்ளது. இந்த அச்சுநூலை அந்நாளில் வாழ்ந்த வித்துவான்கள் பலர் கூடி ஆராய்ந்து அதில் உள்ள பிழைகளை எடுத்துக் காட்டி, திருத்தங்களும் குறித்துள்ளார்கள். இது பற்றி ஏட்டில் காணும் விவரம் பின் வருமாறு :

> 'திருநெல்வேலி அம்பலவாண கவிராயர் பிழை தீர்த்துச் சென்னைப் பட்டினத்துக்கு அனுப்பிவிச்சு அவ்விடத் திலிருந்த திருவாவடுதுறை ஆதீன வித்துவான் அம்பல வாணத் தம்பிரான், சீர்காழி வடுக நாத பண்டாரம் அவர்கள் மறுபடிக் கண்ணோட்டத்துடன் ஆராயப்பட்டு அச்சிற் பதித்த காயிதப் பொத்தகத்தை ஆழ்வார் திருநகரியில், தேவர் பிரான் கவிராயர், ஆதிநாத பிள்ளை தலத்தேடுகள் வைத்துச் சோதித்து வேறேடு எழுதியிருப்பது. மறுபடி திருநெல்வேலியில் அம்பலவாண கவிராயரிடத்தில் தீர்மான மானது".

இக் குறிப்பினால் பாடபேதம் காணும் ஆய்வில் ஈடுபட்டுச் சரியான பாடத்தை நிறுவும் முன்னையோரின் முயற்சி நன்கு புலனாகும். மேலும் இச் சுவடியில் பிழைதிருத்தங்கள் பற்றி விரிவான குறிப்புகள் எழுதியிருப்பதோடு அட்டவணைப் படுத்தியும் பிழை திருத்தம் குறிக்கப்பட்டிருக்கிறது. இந்த அட்டவணை, அதிகாரம், குறள், ஆழ்வார் திருநகரி, அச்சடி பிழை என்னும் நான்கு தலைப்புகளின் கீழ் அமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். 46ஆம் எண்ணுள்ள சூடாமணி ஏட்டிலும் இத்தகைய பாடவேறு பாடுகள் பற்றிய குறிப்பு விவரங்கள் தரப்பட்டுள்ளன.

## அருஞ் சொல்லாட்சி

நூலின் இறுதியில் ஈற்றேட்டில் தரும் சில விவரங்கள் சுவடி எழுதினோருடைய உள்ளப் பாங்கை நன்கு அறிவுறுத்துகின்றன. நெல்லை நாயகம் என்பார் தாம் எழுதிய சுவடியின் இறுதியேட்டில் தரும் விளக்கக் குறிப்பு வருமாறு :

> "சங்கத் தமிழை அனுசரிக்கும் மகாவித்வ சனங்களுக்குத் தொண்டு செய்யும் நெல்லை நாயகம்" (83)

> "சிவனடியார்க்குத் தொண்டு செய்யும் நெல்லை நாயகம் எழுத்து" (43)

இக்குறிப்புகளால் எழுதியவரின் தொண்டு உள்ளம் படிப்போர்க்கு நன்கு புலப்படும். இவ்வாறே 'செக்காலை குடியிலிருக்கும் அடுத்தாரை ரட்சிக்கும் பெருமாள் பிள்ளை' (172) என இன்னொருவர் தம்மைக் குறிப்பார். 'பிழை பொறுக்கும் பெருமாள் எழுதியது' (க66) என்னும் குறிப்பும் எண்ணத்தக்கது. ஆசிரியப் பெருமானிடத்து அளவற்ற பக்தி கொண்டவர்கள் என்பதை, 'திருமேனி கவிராயரவர் பிரசாத குமாரர் ரத்தின கவிராயர் பாத தாமரையே தஞ்சம்' (44) என்னும் குறிப்பு இனிதுணர்த்தும். 'நன்னூல் பொஸ்தகம் நீடுழி காலம் வாழ்ந்திருக்க' (90) என நூலை வாழ்த்தும் மரபும் உண்டு. இங்ஙனம் பல அரிய சொல்லாட்சித் தொடர்கள் சுவடிகளின் இறுதியேட்டில் எழுதியிருப்பது படிக்கப் படிக்கத் தெவிட்டாத விருந்தாக அமைகிறது.

## *முடிவுரை*

அரிய ஏடுகளைத் தன்னகத்தே பெற்றுத்துலங்கும் இந்நூலகச் சுவடிகள் ஆய்வாளருக்குப் பெரும் பயன் நல்கும் பான்மையன. இவற்றுள் அச்சாகாத சுவடிகளையெல்லாம் தொகுத்து விரைவில் அச்சில் வரச் செய்வது மிகமிக இன்றியமையாதபணியாகும். காலப் பழமையான ஏட்டுச் சுவடிகள் நலிந்தும், மெலிந்தும் அழிந்தும் கொண்டிருக்கின்ற சூழலில் விரைவில் பணியைத் தொடங்கி அச்சில் வெளிக் கொணர்வது அறிஞர் தம் கடமையாகும்.

இச் சுவடிகள் ஒவ்வொன்றையும் நன்கு பார்வையிட்டு ஆராய்ந்தால் இன்னும் பல புதிய செய்திகள் தமிழாராய்ச்சி உலகுக்குக் கிடைக்கும் என்பது திண்ணம்.

# காலப் பழமையான ஏடுகள்







1. சீவக சிந்தாமணி — நச்சினார்க்கினியர் உரையுடன்
கொல்லம் 786, கி. பி. 1611
2. நன்னூல் — விருத்தியுரை — கொல்லம் 857, கி. பி. 1682
3. திவாகரம் — கொல்லம் 877, கி. பி. 1702.

# தேசிய நூலகம்

## கல்கத்தா

### தமிழ் - ஓலைச்சுவடிகள் விவரப் பட்டியல்



| வ. எண். | ACC. No-. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| 1. | 3248 | திவாகரர் திவாகரம் (பூர்த்தி)<br>95 ஏடுகள்<br>94, 95 சிதிலம்<br>(கி.பி. 1702) | 11ஆம் தொகுதி ஆதியிற் பொருள் அந்தத்துப் பொருள் என்னும் முறையில் பாகுபடுத்தப்பட்டுள்ளது. 877 ஹூ விஷு தைமீ 14உ திங்கட்கிழமையும் அனுஷமும் செய்யும் சுபதினத்தில் சடகோபன் கவிராயருக்குத் திவாகரம் எழுதி முகிந்தது. திருவழுதிவள நாட்டுத் திருநகரி அழகிய நம்பியா பிள்ளை |
| 2. | 3255 | திவாகரர்<br>திவாகரம் பூர்த்தி | 11ஆம் தொகுதியில் ஆதியிற் பொருள் உள்ளது. அந்தத்துப் பொருள் தரப்படவில்லை. அதன்பின் பழைய முறையில் 11ஆம் தொகுதி எழுதப்பட்டுள்ளது. 904 ஹூ சித்திரை மீ 8உ துதிகை விசாக நட்சத்திரமும் சுக்கிரவாரத்தின் நாள் எழுதியது. |
| 3. | 3249 | திவாகரர்<br>திவாகரம்<br>பூர்த்தி | 11ஆம் தொகுதி ஆதியிற் பொருள் அந்தத்துப் பொருள் என்னும் முறை |

| வ. எண். | ACC. No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | 88 ஏடுகள்<br>நல்லநிலை | யில் பாகுபடுத்தப்பட்டுள்ளது. 955 ௵ அற்பசி ௴ 29௳ எழுதி முகித்தேன். சிவபுரத்தரசு எழுத்து. சீவைகுண்டம் இராமாயண தாதர் அவர்கள் பாடப்படி எழுதினது. |
| | 3249A | இந்த ஏட்டில் பதினொன்றும் தொகுதிக்கு (திவாகரம்) மற்றொரு பிரதியும் உள்ளது.<br>ஏடு 105-126 | |
| 4. | 3261 | திவாகரர் திவாகரம்<br>பூர்த்தி<br>ஏடுகள் 170<br>நல்லநிலை | 958 ௵ புரட்டாதி ௴ 17௳ புலியூர்ப் பண்டாரம் அவர்கள் திவாகர ஏடு எழுதி முகிந்தது. |
| 5. | 3247 | திவாகரர்<br>திவாகரம்<br>பூர்த்தி<br>98 ஏடுகள்<br>89ஆம் ஏடு<br>முதல் சிதிலம் | 11ஆம் தொகுதி ஆதியிற் பொருள் அந்தத்துப் பொருள் என்னும் முறையில் பாகுபடுத்தப்பட்டுள்ளது. |
| 6. | 3242 | திவாகரர்<br>திவாகரம்<br>பூர்த்தி<br>ஏடுகள் 147<br>சில ஏடுகள் சிதிலம் | 11ஆம் தொகுதியில் ஒவ்வொரு பெயருடனும் பல பொருள் ஒரு சொல் என்பதும் சேர்த்துத் தலைப்பாகத் தரப்பட்டுள்ளது. |
| 7. | 3246 | திவாகரர் திவாகரம்<br>பூர்த்தி 172 ஏடுகள்<br>நல்ல நிலை | 11-ஆம் தொகுதி ஆதியிற் பொருள் அந்தத்துப் பொருள் என்னும் முறையில் பாகுபடுத்தப்பட்டுள்ளது. |
| 8. | 3251 | திவாகரர் திவாகரம்<br>பூர்த்தி ஏடுகள் 143<br>நல்ல நிலை | 11-ஆம் தொகுதி ஆதியிற் பொருள் அந்தத்துப் பொருள் என்னும் முறை |

| வ. எண். | ACC No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | | யில் பாகுபடுத்தப்பட்டுள்ளது. |
| 9. | 3263 | திவாகரர் திவாகரம் பூர்த்தி ஏடுகள் 170 நல்ல நிலைமை | அருகன் பெயரில் தொடங்குகிறது. 11ஆம் தொகுதி முழுவதும் அகர வரிசையில் அமைந்துள்ளது. |
| 10. | 3002 | திவாகரர் திவாகரம் பூர்த்தி ஏடுகள் 120 சிதிலம் | அட்சய ஹு அற்பசி மீ 15வ குருவாரம் இந்த சுபதினத்தில் கனகசபை வாத்தியார் பேரன் எழுதி நிறைவேறினது. |
| | 3002A | சூடாமணி நிகண்டு முழுதும் உள்ளது ஏடுகள் 177 சிதிலம் | புதுவையில் வானூர் வேளாளத் தெருவில் வாத்தியார் கனகசபை பேரன் சபாபதி படிக்க எழுதிவைத்தது. பிரபவ ஹு புரட்டாசி மீ 3வ குருவாரம் பிரதமை அசுவதி இந்த தினத்தில் எழுதி நிறைவேறினது. |
| 11. | 3019 | திவாகரர் திவாகரம் பூர்த்தி ஏடுகள் 115 நல்ல நிலை | |
| | 3019A | அகராதி முதற்றொகுதி ஏடுகள் 1-19 நல்லநிலை | அகரவரிசை தொடங்கி 'உய்த்தல் எனும் பெயர் உண்டாக்குதலாம்' என்பதுவரை உள்ளது. |
| | 3019B | வெண்பாப் பாட்டியல் நல்ல நிலை. | அபூர்த்தி மூன்று ஏடுகள் |
| | 3019C | திருவாசகக் கட்டளை பூர்த்தி 11 ஏடுகள்; நல்லநிலை | |
| | 3019D | சிவப்பிரகாசக் கட்டளை பூர்த்தி; ஏழு ஏடுகள் நல்ல நிலை. | |
| 12. | 3260 | திவாகரர் திவாகரம் பூர்த்தி ஏடுகள் 1-62 நல்லநிலை | 11ஆம் தொகுதி ஆதியிற்பொருள் அந்தத்துப் பொருள் என்னும் முறையில் பாகுபடுத்தப்பட்டுள்ளது. |

| வ. எண். | ACC. No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | 3260A | சூடாமணி நிகண்டு 11ஆம் தொ. மட்டும் ஏடுகள் 1-12 நல்லநிலே | |
| | 3260B | காங்கேயன் உரிச் சொல் 10ஆம் தொகுதி மட்டும். ஏடுகள் 1-7 நல்ல நிலே. | |
| 13. | 3259 | திவாகரர் திவாகரம் பூர்த்தி. 58ஆம் ஏட் டிற்குப் பின்னர் சிதி லம். | அருகன் பெயரில் தொடங்கு கிறது. 11ஆம் தொகுதி ஆதியிற் பொருள் அந்தத் துப் பொருள் என்னும் முறையில் பாகுபடுத்தப் பட்டுள்ளது. சீவைகுந்தம் கள்ளபிரான் கவிராசன் குமாரன் தெய்வசிகா மணிக் கவிராசர் அவர் களிடத்தில் திவாகரம் பன் னிரண்டு தொகுதியும் வேண்டிப் பறக்கையில் சித்திர புத்திரன் குமரப் பெருமாள் தனது வகைக்கு எழுதி முகித்த ஏடு. |
| 14. | 3250 | திவாகரர் திவாகரம் அபூர்த்தி ஏடுகள் மிக மிகச் சிதிலம் (கி.பி. 1799) | அருகன் பெயரில் தொடக் கம். 11ஆம் தொகுதி இல்லே<br>974 ஞ் புரட்டாசி மீ 23உ மந்த வாரமும் மகநட்சத் திரமும் கூடின சுப தினத் தில் எழுதி முகிந்தது முற் றும். சீவைகுண்டம் கள்ள பிரான் கவிராசர் புத்திரன் தெய்வசிகாமணிக் கவி ராசன் திவாகரம். |
| | 3250A | அழகர் அந்தாதி ஏடுகள் 1-7 65ஆம் பாடல் வரை ஏடுகள் சிதிலம். | இச்சுவடியில் சேர்ந்துள்ளது. |

| வ. எண். | ACC. No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| 15. | 3253 | திவாகரர் திவாகரம் அபூர்த்தி. ஏடுகள் நல்ல நிலை | அருகன் பெயரில் தொடங்குகிறது. முதல் மூன்று தொகுதிகள் மட்டும். திருவேங்கடம் கவிராசர் குமாரன் தாயபலந்தீர்த்தான் கவிராசரவர்கள். 1023 ஆு தை மீ 16 உ (1848) |
| | 3253 A | முதல் தொகுதி (திவாகரம்) மட்டும் உண்டு. ஏடுகள் நல்ல நிலை | 1023 ஆு தை மீ 16உ தாயபலந்தீர்த்தான் கவிராசர் திவாகரம் முதலாவது எழுதி வாசித்து முகிந்தது முற்றும். |
| 16. | 3254 | திவாகரர் திவாகரம் அபூர்த்தி. ஏடுகள் நல்லநிலை | முதல் ஐந்து தொகுதிகள் பூர்த்தி. ஆறும் தொகுதியில்உபகரணத்தின் பெயர் வரையிலும் உள்ளது. ஒவ்வொரு தொகுதிக்கும் தனி வரிசை எண். தலையேட்டில் மருதப்பன் சுவடி எனக் குறிக்கப்பட்டுள்ளது. |
| 17. | 3264 | திவாகரர் திவாகரம் அபூர்த்தி. ஏடுகள் 48 சிதிலம் | 7ஆவது செயற்கை வடிவப் பெயர்த் தொகுதியில் பச்சைநிறத்தின் பெயர் வரை உள்ளது. |
| 18. | 3262 | திவாகரர் திவாகரம் அபூர்த்தி. ஏடுகள் 2—108 நல்லநிலை | 11-ஆம் தொகுதியில் 'பல்வகையுணவும் பயிரும் பொன்னும்' எனத்தொடங்கும் நூற்பா வரையிலும் உள்ளது. நூற்பாக்களுக்கு வரிசை எண் தரப்பட்டுள்ளது. |
| 19. | 3245 | திவாகரர் திவாகரம் அபூர்த்தி. ஏடுகள் | 11ஆம் தொகுதி ஆதியிற் பொருள் அந்தத்துப் |

| வ. எண். | ACC. No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | வரிசையாக இல்லை. சிதிலம் | பொருள் முறையில் பாகு படுத்தப் பெற்றுள்ளது. அந்தத்துப் பொருள் குறை. 12ஆம் தொகுதி முழுமையும் உண்டு. |
| 20. | 3286 | திவாகரர் திவாகரம் அபூர்த்தி. ஏடுகள் 1—64. சுவடியின் சரிபாதி முறிந்துள்ளது | 969 ஆண்டு கார்த்திகை மீ 22 உ (1794) சோமவாரம் கூடிய சுபதினத்தில் எழுதி முகிந்தது. |
| 21. | 3252 | திவாகரர் திவாகரம் அபூர்த்தி. ஏடுகள் சிதிலம் | அருகன் பெயரில் தொடங்குகிறது. 1 முதல் , ஆம் தொகுதி வரை. |
| | 3252A | திவாகரம் ஏடுகள் சிதிலம் | முதல் இரண்டு தொகுதிகள் மட்டும். அருகன் பெயரில் தொடங்குகிறது. |
| 22. | 3257 | திவாகரர் திவாகரம் அபூர்த்தி. 11-12 ஏடுகள் 44-49 1-23 சுமார் | 11ஆம் தொகுதி ஆதியிற் பொருள் அந்தத்துப் பொருள் என்று பாகு படுத்தப்பட்டுள்ளது. |
| 23. | 3256 | திவாகரர் திவாகரம் அபூர்த்தி. 1 முதல் 5 பூர்த்தி. ஏடு 1-24 | 11ஆம் தொகுதி ஏடு எண் 25இல் தொடக்கம். ஆதியிற் பொருள் மறைவரை விளக்கம் உள்ளது. |
| 24. | 3265 | திவாகரர் திவாகரம் அபூர்த்தி. ஏடுகள் நிலை நல்லநிலை | 1 முதல் 11 தொகுதிகள் |
| 25. | 3266 | திவாகரர் திவாகரம் அபூர்த்தி. ஏடுகள் 1—150. நல்லநிலை | 11 ஆம் தொகுதி ஆதியிற் பொருள் அந்தத்துப் பொருள் என்னும் முறையில் பாகுபடுத்தப்பட்டுள்ளது. 12 ஆம் தொகுதியில் |

| வ. எண். | ACC No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | | நவதாரணைப் பெயர் வரை உள்ளது. |
| 26. | Un num-bered | திவாகரர் திவாகரம் அபூர்த்தி. ஏடுகள் சிதிலம். வரிசையாக இல்லை. | சீதாள ஓலையில் அமைந்தது ஒவ்வொரு ஏட்டிலும் ஏழு பத்தியாகப் பிரித்து எழுதப்பட்டுள்ளது. |
| 27. | 3017 | திவாகரர் திவாகரம் பூர்த்தி. ஏடுகள் 127. மிகவும் சிதிலம். | 11ஆம் தொகுதி ஆதியிற் பொருள் அந்தத்துப் பொருள் என்னும் பாகுபாட்டில் அமைந்துள்ளது. |
| 28. | 3243 | பிங்கலர் பிங்கலம் பூர்த்தி. ஏடுகள் 73 நல்லநிலை. | தலையேட்டில் 'பிங்கலம் ஆதி முதல் அந்தம் வரைக்கும் இருக்குது. பிழையற்றபாடமாதலால் முட்டு (?) பொத்தகம் பிழையாயிருப்பது பார்த்துத் திருத்த வேண்டியது' எனக் குறிக்கப்பட்டுள்ளது 'தேனரு மகிழ்த் தொடையாலும்' என்றும் 'தூங்காத் திருப்புளிக்கீழ்' என்றும் தொடங்கும் இரு சடகோபர் துதிப்பாடல்கள் உள. பின்னர்த் 'தவளத் தாமரை' தொடங்குகிறது. இறுதியில் 'வான்வகை முதலாக ஒரு சொல் பல் பொருள் ஈருகத் திவாகரர் பயந்த பிங்கல முனிவனால் செய்யப்பட்ட பிங்கலம் முற்றும்' எனக் குறிக்கப்பட்டுள்ளது. |
| | | (கி.பி. 1806) | 981 ஞ் தை மீ 19உ குரு வாரமும் ஏகாதசியும் ரோகிணி நட்சத்திரமும் பெற்ற சுபதினத்தில் எழுதி முற்றினது. |

| வ. எண். | ACC No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| 29. | 3192 | பிங்கலர் பிங்கலம் பூர்த்தி. ஏடுகள் 98 நல்லநிலை | (கி.பி. 1830) 1005 ஷு ஆடி மீ 25உ வெள்ளிக்கிழமை சோதி நட்சத்திரம் கூடின சுபயோக சுபதினத்தில் ஸ்ரீ வைகுண்டம் சடகோபன் கவிராசர் குமாரன் வைகுந்தநாதன் எழுதி முடித்தது. வைகுந்தநாதன் ஏடு. பிங்கலம் முற்றும். |
| 30. | 3209 | பிங்கலர் பிங்கலம் பூர்த்தி ஏடுகள் 84 | ஈற்றேடு சிதிலம். 53 வது ஏடு தொடக்கமாகக் கீழ்ப் பகுதி சிதிலம். |
| 31. | 3172 | பிங்கலர் பிங்கலம் | ஏடுகள் படிக்க வியலாத வண்ணம் சிதிலமாயுள்ளன. |
| 32. | 3058 | பிங்கலர் பிங்கலம் அபூர்த்தி. ஏடுகள் 49 நல்லநிலை | முதல் இரண்டு தொகுதிகள் மட்டும். தலையேட்டில் 'பிரம்பூர் சிரஞ்சீவி ஆனந்த ரங்க திருவேங்கிடம்பிள்ளை வாசிக்கின்ற பிங்கலந்தை' என எழுதப்பட்டுள்ளது. தாது ஷு, மாசி மீ 25உ மங்களவாரதினம் காலமே 10-30 மணிக்கு எழுதி முகிந்தது. |
| 33. | 3157 | பிங்கலர் பிங்கலம் அபூர்த்தி | மூன்று முதல் 5ல் 68 ஆம் சூத்திரம் முடிய உள்ளது. |
| 34. | 3140 | காங்கேயன் உரிச்சொல் நிகண்டு பூர்த்தி. ஏடுகள் 21 நல்லநிலை | பெரிய திருவடி திருமேனி கவிராயகுரு புத்திரரான ரத்தினகவிராய குரு சீபாத தாமரைகளே சரணம். ஆசார்யனே தெய்வம். |
| | 3140A | அரங்கரந்தாதி பூர்த்தி ஏடு 13 நல்ல நிலை (கிபி 1775) | 'திருவரங்கா உறைமார்பா' எனத் தொடங்கும் பிள்ளைப் பெருமாளையங் |

| வ. எண். | ACC No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | | கார் பாடிய திருவரங்கத்தந் தாதி. 953 ௵ ஆவணி மீ 26 உ தேவர்பிரான் படித்து முற்றியது. |
| 35. | 3153 | காங்கேயன் உரிச் சொல் நிகண்டு பூர்த்தி. ஏடுகள் 31 நல்லநிலை | தலையேட்டில் அழகப்ப குருக்கள் அழகப்ப பண்டாரசன்னதி என்று குறிக்கப்பட்டுள்ளது. பின்னேட்டில் வீரப்ப உபாத்தியாயர் என்று எழுதப்பட்டுள்ளது. |
| 36. | 3018 | காங்கேயன் உரிச் சொல்நிகண்டு பூர்த்தி. ஏடுகள் 58 நல்லநிலை | இஃது புதுவை மாநகரம் குவேற்னமா அச்சுக் கூடத்தில் துத்தென் துரை யவர்களால் 1840௵ பதிப் பிக்கப்பட்டுள்ளது. இதன் விலை ரூ (3/4) |
| 37. | 3054 | காங்கேயன் உரிச் சொல்நிகண்டு பூர்த்தி. ஏடுகள் 32 | ஏடுகள் ஒன்றோடொன்று ஒட்டிப் பிரிக்கமுடியாத நிலையில் உள்ளன. சுமார். |
| 38. | 3015 | காங்கேயன் உரிச் சொல் நிகண்டு அபூர்த்தி. ஏடுகள் நல்லநிலை | ஏழாவது வடிவின் பெயர்த் தொகுதியோடு முடிவுறு கிறது. |
| | 3015A | திருக்குறள் | 26 அதிகாரங்கள் எழுதப் பட்டுள்ளன. 26 ஆவது அதிகாரம் புலால் மறுத் தல் வரைக்கும் உள்ளது. |
| 39. | 3353 | காங்கேயன் உரிச் சொல் நிகண்டு அபூர்த்தி. ஏடுகள் 34 சிதிலம் | 9ஆவது செயல் பற்றிய பெயர்த் தொகுதிவரை உள்ளது. |
| 40. | 3176 | காங்கேயன் உரிச் சொல் நிகண்டு | பத்தாவது ஒரு சொல் பல் பொருள் தொகுதி குறை |

| வ. எண். | ACC. No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | அபூர்த்தி. ஏடுகள் நல்லநிலை | யாக உள்ளது. |
| 41. | 3282 | காங்கேயன் உரிச் சொல் நிகண்டு அபூர்த்தி. | ஏடுகள் இருபுறமும் ஒடிந்து மிகவும் சிதிலமாயுள்ளன. பயன்படா நிலை. |
| 42. | 3090 | மண்டல புருடர் சூடா மணி நிகண்டு பூர்த்தி. ஏடுகள் 110 சிதிலம். | தில்லையாளியில் வாழ்கின்ற அருணசலம் பிள்ளை சுத னும் நடராஜ பிள்ளைக்கு இளையவனுன சரவணைக் கிளையவனுன விறுத்தா சலம் தன் கனிட்டனுகிய விறுத்தாசலத்துக்கு மண்ட லவன் நிகண்டு எழுதி நிறைவேறியது. சர்வதாரி ஷு ஆனி மீ 4உ ஆதிவாரமும் பஞ்சமி திதி யும் கூடின சுபதினத்தில் ஆதியுமந்தமுமில்லாத கர்த் தனுமாய் சகல சீவசந்துக் களுக்குத் தாயுமாய் கடல் சூழ்ந்த பூலோகத்துக்கு நாயகனுகிய பிரம்மாவினு டைய வேதத்துக்கு முதற் கொழுந்தாய் அன்புள்ள பக்தாளுடைய இருதயத் தில் கிருபைக்கடியாய் நிறைந்திருக்கும் சிவமயம். |
| 43. | 3188 | மண்டலபுருடர் சூடா மணி நிகண்டு பூர்த்தி. ஏடுகள் 80 நல்ல நிலை. | இறுதி யேட்டில் 'சிவனடி யார்க்குத் தொண்டு செய் யும் நெல்லை நாயகம் எழுத்து' என எழுதப்பட் டுள்ளது. |
| | 3188A | உரிச்சொல் நிகண்டு பூர்த்தி. ஏடுகள் 11 | இறுதியேட்டில் 'இது நமசி வாயம் பிள்ளையும் நெல்லை |

| வ. எண். | ACC. No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | நல்ல நிலை. | நாயகமும் எழுதினது, எனக் குறிக்கப்பட்டுள்ளது. |
| 44 . | 3125 | மண்டலபுருடர் சூடாமணி நிகண்டு பூர்த்தி. ஏடுகள் 98 நல்ல நிலை. | தலையேட்டில் 'மண்டலவன் நிகண்டு முதலாவது முதல் பன்னிரண்டாவதுவரையும் இருக்குது. பிழைபார்த்து மைக்காப்பு சாத்தவும்' என்று எழுதப்பட்டுள்ளது. |
| | | (கி. பி. 1800) | 975 ஹு கற்கடக மீ 15உ மந்த வாரமும் தசமியும் ரோகிணி நட்சத்திரமும் சுபயோக சுபகரணமும் பெற்ற சுபதினத்தில் மண்டலவன் நிகண்டு முதலாவது முதல் பன்னிரண்டாவது வரையும் எழுதி முகிந்தது. திருமேனி கவிராயரவர் பிரசாத குமாரர் ரத்தின கவிராயர் பாத தாமரையே தஞ்சம். |
| | 3125A | ஆசிரியநிகண்டு | சுவடியின் முதல் மூன்று ஏடு ஆசிரிய நிகண்டைச் சார்ந்தவை. இறுதி நான்கு ஏடுகளும் (92, 93, 95, 96) நிகண்டைச் சார்ந்தவை. |
| 45. | 3200 | மண்டல புருடர் சூடாமணி நிகண்டு பூர்த்தி. ஏடுகள் 204. | முதல் ஐந்து ஏடுகளும் இறுதியில் சில ஏடுகளும் சிதிலம். குரோதி ஹு தை மீ 21உ உத்திரட்டாதி நக்ஷத்திரமும் சுபயோக சுபகரணமும் கூடின சுபதினத்தில் ஆதிவாரம் எழுதி முடிந்தது முற்றும். |

| வ. எண். | ACC. No-. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | | 'கவிராய சுவாமிகிட்ட படித்தது. திருநெல்வேலியிலே முத்துக்குமாரசுவாமி ஓதுவார்கிட்ட படித்தது'. |
| *46.* | *2983* | மண்டலபுருடர் சூடாமணி பூர்த்தி. ஏடுகள் 231- சிதிலம் ஒன்றோடு ஒன்று ஒட்டியுள்ளது. | ஒவ்வொரு தொகுதியிலும் இவ்வளவு விருத்தங்கள் எனத் தொகுத்துக் கணக்கிட்டு இறுதியில் தரப்பட்டுள்ளது. நிகண்டு 12 தொகுதியும் சுசீந்திரத்து நல்லூரில் கைக்கொண்ட வீரநாராயணச் சேரியில் நமசிவாயம் பிள்ளைக்குக் கோட்டாற்றில் சித்திரகுத்த மூப்பனாருக்கு அருணாசலம் பிள்ளை எழுதினது. தேரூர் நரசிங்கமூர்த்தி பிள்ளை வகை 1; சேந்தமங்கலம் தாணுமாலயப் பெருமாள் செட்டியார் எழுதினது வகை 1; |
| | | | பல ஏடுகளை ஒப்புநோக்கி அவற்றில் கண்ட பாடவேறுபாடுகள் பற்றிய குறிப்பும் ஈற்றேடுகளில் குறிக்கப்பட்டுள்ளது. |
| | | (கி. பி. 1770) | 945 ௵ விரோதி ௵ பங்குனி௴ 25௳ சௌமிய வாரமும் பூச நட்சத்திரமும் ஸ்ரீ ராமநவமியும் சுக்கிரநாம யோகமும் பெற்ற சுபதினத்தில் வீரநாராயணசேரியிலிருந்து ராமாயணம் கிட்கிந்தைப்படலம் வாசிக்கிறபோது முகிந்தது. |

| வ. எண். | ACC No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| 47. | 3079 | மண்டலபுருடர் சூடாமணி நிகண்டு பூர்த்தி. ஏடுகள் சுமார். | 56ஆம் ஏட்டிற்குப் பின் சிதிலமடைந்துள்ளன. |
| 48. | 3185 | மண்டலபுருடர் சூடாமணி நிகண்டு அபூர்த்தி. | ஏடுகள் மிகவும் சிதிலம் படிக்க இயலா நிலை. |
| 49. | 3076 | மண்டலபுருடர் சூடாமணி நிகண்டு அபூர்த்தி. ஏடுகள் 56 சிதிலம் | பத்தாவது ஒலிபற்றிய பெயர்த் தொகுதியோடு முடிவுறுகிறது. |
| 50. | 2979 | மண்டலபுருடர் சூடாமணி நிகண்டு அபூர்த்தி. | ஏடுகள் மிகவும் சிதிலம் படிக்க இயலா நிலை. |
| 51. | 3269 | மண்டலபுருடர் சூடாமணி நிகண்டு அபூர்த்தி. ஏடுகள் 32 நல்ல நிலை. | பதினோராவது தொகுதி மட்டும். தலையேட்டில் 'திருவேங்கடத்தான் ஏடு' என எழுதப்பட்டுள்ளது. |
| | | (கி. பி. 1797) | 972 ஞு மாசி மீ 29உ திருவேங்கடத்தான் நிகண்டு புனர்பூச நட்சத்திரத்தில் முகிந்தது. |
| | | | இறுதியில் 9 ஏடுகள் (1-9) உள்ளன. சூடாமணி நிகண்டைச் சார்ந்தவை அபூர்த்தி. |
| 52. | 3187 | மண்டலபுருடர் சூடாமணி நிகண்டு அபூர்த்தி. ஏடுகள் 57 நல்ல நிலை முதல் ஏடு சிதிலம். | பதினோராவது தொகுதி தனியே தொடங்கப்பட்டுள்ளது. அபூர்த்தி 8 ஏடு. |
| | | (கி, பி. 1835) | 1010 ஞு தை மீ 26உ சுக்கிரவாரமும் ரோகிணி நட்சத் |

| வ. எண். | ACC. No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | | திரமும் கூடிய சுபதினத்தில் எழுதி முகித்தேன். திருக்கோளூர் கவிராசர் குமாரன் சுப்பிரமணியன் சுவடி. |
| 53. | 3290 | மண்டலபுருடர் சூடாமணி நிகண்டு அபூர்த்தி. ஏடுகள் 17-34 நல்ல நிலை, | 11ஆம் தொகுதி குறை. |
| 54. | 3147 | மண்டலபுருடர் சூடாமணி நிகண்டு அபூர்த்தி. ஏடுகள் 30 நல்லநிலை. | பதினோராவது தொகுதி — குறை |
| 55. | 3063 | மண்டலபுருடர் சூடாமணி நிகண்டு அபூர்த்தி. | ககரவெதுகை தொடக்கம் பகரவெதுகை குறை. ஏடுகள். 3-25 நல்லநிலை. |
| 56. | 3107 | இரேவணசித்தர் அகராதி நிகண்டு பூர்த்தி. ஏடுகள் 121 நல்லநிலை 118 முதல் சிதிலம் | (கி.பி. 1790) 965 ஞு செளமிய ஞு மீ 8உ சுக்கிரவாரமும் துவாதசியும் பூசநட்சத்திரமும் பெற்ற சுபதினத்தில் எழுதி முற்றியது. |
| 57. | 3014 | இரேவணசித்தர் அகராதி நிகண்டு அபூர்த்தி. | ஏடுகள். 63 வரை உள்ளது சிதிலம் |
| 58. | 3024 | அகராதி மோனைக் ககராதி யெதுகை பூர்த்தி. ஏடுகள் 1—99 நல்லநிலை | 'அகரம் நாதமாத்திரையாகிய இயல்பால் பிறந்த அகரம்' எனத்தொடங்கி, 'வையாளி செண்டு வெளி' என்னும் நூற்பாவோடு முடிவுறுகிறது. |
| 59. | | ஆசிரிய நிகண்டு | |
| 59A | 3268 | ஆண்டிப்புலவர் ஆசிரிய நிகண்டு | பாயிர இறுதியில், 'ஊற்றங்கால் பாவாடை வாத்தியார் |

| வ. எண். | ACC No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | அபூர்த்தி. ஏடுகள் 23 நல்லநிலை | செம்மல் நாமநற்கீரனே' என்று குறிக்கப்பெற்றுள் ளது. |
| | 3268 A | ஆசிரியநிகண்டு | குறை. ஏடுகள் 22-35 வரிசை யாக இல்லை. |
| 60. | 2978 | சைலாச நிகண்டு பூர்த்தி. ஏடுகள் 67 சிதிலம் | இறுதியில் 'சைலாசநிகண்டு சூளாமணி முற்றும்' எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது. |
| | 2978 A | அகராதி நிகண்டு அபூர்த்தி சிதிலம் | ஏடுகள் வரிசையாக இல்லை. |
| 61. | 2976 | சிவசுப்பிரமணியக் கவிராயர் நாமதீப நிகண்டு பூர்த்தி. ஏடு கள் 111. நல்லநிலை | தலையேட்டில் 'ஆனைமுக னைக் குகனை ஆதிபுவனேசு வரியை - ஞான முதல் சொக்க நாதனையும் மேன்மை பெறுஞ் சாமி கவிராசனையும் தான் வணங்கிப் பேருரைப்பன். பூமிதனில்உள்ள பேருக்கு இந்தப் படிக்கு அறிவேன் விறுத்தாசலம் பிள்ளை அறி வேன் சாமி கவிராசர்' என்று குறிப்பிடப்பட்டுள் ளது. |
| 62. | 3267 | சாமிகவிராயர் பொதி கை நிகண்டு அபூர்த்தி ஏடுகள் 131 நல்லநிலை | பத்தாவது பெயர்த் தொகுதி யில் இறுதி ஏடு சிதிலம் |
| | 3267 A | உவமையலங்காரம் பூர்த்தி. 6 ஏடுகள் நல்ல நிலை | 'சிவகுருநாதன் சேவடி வண ங்கி உவமையின் இயல்பு உரைக்குவன் யானே' எனத் தொடங்குகிறது. 34 பாடல்கள். |
| 63. | 2994 | பல்பொருட் சூளாமணி அபூர்த்தி | அகராதி நிகண்டுபோல் அகர வரிசையில் அமைந் |

| வ. எண். | ACC. No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | ஏடுகள் 67+59 நல்ல நிலை | தது 'வெம்மை யெனும் பெயர் விருப்பும் உட்டண மும்' என்னும் நூற்பா வோடு முடிகிறது. |
| 64. | 3174 | விரிபொருள் நிகண்டு பூர்த்தி. ஏடுகள் 142 நல்லநிலை | இறுதியில் 'ஒலி பற்றிய பெயர்த் தொகுதி கவிதை பதினெட்டாகுமே' என முடிகிறது. 'ஆகத்தொகுதி 10க்குச்செய்யுள் 283' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. |
| 65. | 2975 | விரிபொருள் நிகண்டு அபூர்த்தி. ஏடுகள் மிக வும் சிதிலம் | பதினோராவது தொகுதி மட் டும். இறுதியில் 'ஆகப் பாயிரம் உட்படச் செய் யுள் 427' எனக் குறிக்கப் பட்டுள்ளது. |
| 66. | 3102 | விகடப்பிரசங்கப் பழ மொழி-பூர்த்தி ஏடுகள் நல்லநிலை | 'அகங்கண்டது புறஞ்சொல் லாதே' எனத்தொடங்கி, 'வைத்த பண்டம் பார்த்து வயிறெரிந்து நின்றது போல' என்னும் பழமொழி யோடு நிறைவு பெறுகிறது. ஒவ்வொரு எழுத்துக்குரிய பழ மொழிகளும் தனித் தனியே பிரித்து ஏட்டில் எழுதப்பட்டுள்ளன. |
| | 3102 A | | மற்றும் ஒரு பழமொழித் தொகுப்பு உண்டு. 'அகப் பை சுவை அறியுமா' எனத் தொடங்கி 'குருடனோடு மேய்க்க' என்பதோடு முடி கிறது. அபூர்த்தி. 19ஏடுகள் நல்லநிலை |
| | 3102 B | இருசொல்லலங்காரம் அபூர்த்தி | 'அசுரகுலம் அழிவதேன் அரி வையர் துணி கிழிவதேன்' எனத் தொடங்குகிறது. |

| வ. எண். | ACC. No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | 3102C | முச்சொல்லலங்காரம் அபூர்த்தி. ஏடுகள் நல்லநிலை. | |
| 67. | 2970 | அகராதி பூர்த்தி. ஏடுகள் 279 நல்லநிலை. | 'அகரம் நாதமாத்திரையியல் பாற் பிறந்த அகரம்' எனத் தொடங்கி 'வெளவல் கொள்ளையிடல் பிடித்தல்' என்பது வரை உள்ளது. |
| | | (கி.பி 1832) | ஆழ்வார் திருநகரி ஆதிநாத பிள்ளையவர்கள் ஏடு பார்த்து 1007 ஷ அற்பசி மீ 10உ திங்கட்கிழமையும் ரோகிணி நட்சத்திரமும் இராசத வேளையும் துலா லக்கினமும் கூடின சுப தினத்தில் எழுத ஆரம்பித்து கார்த்திகை மீ 7 உ ஆதித்தவாரம் ரோகிணி நட்சத்திரமும் இராசத வேளையும் மகரலக்கினமும் கூடின சுபதினத்தில் அகராதி எழுதி முடிந்தது. முத்தய்யன் எழுதி ராம ஜெயம் கவிராசர் அவர்களுக்கு எழுதிக்கொடுத்தது. |
| | | | மூன்ருவது தொகை அகராதியும் (சதுரகராதி) இச்சுவடியில் உண்டு. ஏடுகள் 1-38 நல்லநிலை. |
| 68. | 2993 | அகராதி பூர்த்தி ஏடுகள் 278 நல்லநிலை. | 'அகரம் நாதமாத்திரையியல் பால்பிறந்த அகரம்' எனத் தொடங்கி 'வெளவல் கொள்ளையிடல் பிடித்தல் வாருதல்' வரை உள்ளது. |

| வ. எண். | ACC. No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | | பிள்ளைக்கண் பிள்ளையவர்கள் குமாரர் ஆதிநாத பிள்ளை அகராதி. ஷியார் மகன் இளையவன் பெரிய திருவடிப்பிள்ளை எழுதினது. அகராதி வயித்திய லிங்கன் பிள்ளை ஏடு பார்த்து எழுதினது. |
| | | (கிபி 1928) | 1103ஞ் சர்வசித்து ஞ் தை மீ 7தீ வெள்ளிக்கிழமை பூர்வபட்சம் திருவோண நட்சத்திரம் பகல் கும்ப லக்கினத்தில் தொடங்கி யெழுதினது. ஷி வருஷம் மாசி மீ 12 உ வெள்ளிக் கிழமை பூர்வ பட்சம் கார்த்திகை நட்சத்திரம் பகல் கும்ப லக்கினத்தில் பெரிய திருவடி மேற்படி அகராதி யெழுதி நிறை வேறினது. இந்த அகராதியை நான் 1104 ஞ் ஷி மீ 19 உ வெள்ளிக்கிழமை ரேவதி நட்சத்திரம் துலா லக்கின முதல் பிழை பார்த்து உயிர் எழுத்து உயிர்மெய் எழுத்து ஒற்றெழுத்து இதுகளில் மொழிக்கு முதல் எழுத்துகளும் நூதனம் எழுதி 1104 ஞ் பங்குனி மாதம் 14 உ வெள்ளிக் கிழமை எழுதி முகிந்தது. ஆழ்வார் திருவடிகளே சரணம். இன்னும் பிழை தீர வேண்டியது உண்டு. |
| 69. | 3078 | வீரமாமுனிவர் பெய ரகராதி ஏடுகள் 164 | 'அகக்காழ் உள் வயிரம்' தொடங்கி 'வெளிசம் |

| வ. எண். | ACC. No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | சிதிலம் | தூண்டில்' என்பது வரை உள்ளது. |
| 70. | 2988 | வீரமாமுனிவர் தொகையகராதி ஏடுகள் 30 சிதிலம். | வீரமாமுனிவர் செய்த சதுரகராதியில் தொகையகராதியை எழுதத்தரங்காபுரம் சண்முககவிராசர் அவர்களால் பார்வையிடப்பட்டு சிந்தாதிரிப்பேட்டை நெல்லு மண்டி வெங்கட்டராம முதலியார் அவர்கள் புத்திரராகிய கேசவ முதலியார் அவர்களால் பதிப்பிக்கப்பட்டது. |
| | | (கி. பி. 1848) | சாலிவாகன ௵ 1770இல் நிகழ்கின்ற கீலக௵. |
| | | (கி. பி. 1863) | இது 1038 ௵ ஆடிமீ 12வ எழுதி முடிந்தது. |
| | 2988A | கூர்மபுராணம் ஏடுகள் 31 நல்லநிலை. | கூர்மபுராணத் தெரிவு கவிகளும் இச் சுவடியில் உள்ளன. |
| 71. | 3094 | அகராதி அபூர்த்தி. ஏடுகள் 48 நல்லநிலை. | 'அ ஸ்ரீமன் நாராயணன்' தொடங்கி 'முக்கோடம்' வரை எழுதப்பட்டுள்ளது. |
| 72. | 3138 | அகராதி ஏடுகள் 149 நல்லநிலை. | 'அகக்காழ் உள் வயிரம்' எனத் தொடங்கி 'வெளவியம் துன்பம்'வரை எழுதப்பட்டுள்ளது. |
| 73. | 3067 | தொல்காப்பியர் தொல்காப்பியம் 100 ஏடுகள் மிகவும் சிதிலம். | மூலம் மட்டும் உள்ளது. ஒன்றேடொன்று ஒட்டியுள்ளது. |
| 74. | 3182 | தொல்காப்பியர் தொல்காப்பியம் எழுத்து. | இளம் பூரணர் உரையோடு கூடியது. |

| வ. எண். | ACC. No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | ஏடுகள் 129 மிகவும் சிதிலம். | |
| 75. | 3143 | தொல்காப்பியர் தொல் காப்பியம் அபூர்த்தி. ஏடுகள் 37 நல்லநிலே. | எழுத்து முடிய இளம் பூரணர் உரை உள்ளது. |
| | | | 'எழுத்ததிகாரத்து இளம் பூரணர் விருத்திக் காண் டிகை முடிந்தது' எனக் குறிக்கப்பட்டுள்ளது. |
| | | | சொல்லதிகாரத்தின் முதல் சூத்திரம் தொடங்கப்பட் டுள்ளது. ஏட்டிற்கு 15 வரிகள். |
| 76. | 3241 | தொல்காப்பியர் தொல் காப்பியம் எழுத்து, சொல் இளம்பூரணம் பூர்த்தி ஏடுகள் சிதிலம். | இறுதியில், 'சொல்லதிகாரமு முண்மைப் பொருளும் உதாரணமும் முடிந்தது' எனக் குறிக்கப்பட்டுள் ளது. |
| | | (கி. பி. 1716) | 891ஹ மன்மதஹ கார்த் திகை மீ ... புதன்கிழமையும் மிருக சீரிட நக்கத்திரமும் திதிகையும் சித்திநாம யோக மும் பெற்ற சுபயோக சுப தினத்தில் சங்கர மூர்த்தியா பிள்ளை அவர்களுக்குத் தொல்காப்பியம் இளம்பூரண உரையாசிரியர் உரை எழுத்தும் சொல்லும் எழுதி ஞன் திருவழுதி வளநாட்டுத் திருநகரி அழகிய நம்பியா பிள்ளை திருவேங்கட முடையான். |
| 77. | 3037 | தொல்காப்பியர் தொல் காப்பியம் அபூர்த்தி. ஏடுகள் நல்லநிலே | பொருள் மரபியல் முடிய உள்ளது. இறுதியில் சில ஏடுகள் சிதிலம். |

| வ. எண். | ACC No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| 78. | 3056 | தொல்காப்பியர் தொல் காப்பியம் அபூர்த்தி. ஏடுகள் 65 நல்லநிலை. | பொருள் அகத்திணையியல் முதல் பொருளியல் வரை நச்சினார்க்கினியர் உரையுடன் கூடியது. பின்னர் மெய்ப்பாட்டியல் தொடங்கிச் செய்யுளியல் வரை உள்ளது. |
| 79. | 3114 | தொல்காப்பியர் தொல் காப்பியம் ஏடுகள் சிதிலம். | புறத்திணையியல் மட்டும். பெத்து நாய்க்கன் பேட்டை ரத்தின ஐயரால் எழுதி நிறைவேறினது. |
| 80. | 3184 | தொல்காப்பியர் தொல் காப்பியம் அபூர்த்தி. சிதிலம். | களவியல் நச்சினார்க்கினியர் உரையுடன் கூடியது. ஏடுகள் வரிசையாக இல்லை. |
| 81. | 3178 | தொல்காப்பியர் தொல் காப்பியம் ஏடுகள் 195 நல்லநிலை. | பொருள் செய்யுளியல் பேராசிரியர் உரையுடன் கூடியது. தாதுஞூ ஆவணி மீ செய்யுளி லக்கணம் பெத்து நாய்க்கன் பேட்டை உபாத்தியாயர் இரத்தினவையரால் எழுதி நிறைந்தது. |
| 82. | 3032 | தொல்காப்பியர் தொல் காப்பியம் அபூர்த்தி. ஏடுகள் 203 நல்லநிலை. | பொருள் பேராசிரியர் உரை எட்டாவது செய்யுளியல் தொடங்கி ஒன்பதாவது மரபியல் முடிய உள்ளது. |
| 83. | unnumbered | குணவீரபண்டிதர் நேமி நாதம் பூர்த்தி. ஏடுகள் 325-377. நல்ல நிலை. (கி. பி. 1728) | உரையுடன் கூடியது. 903ஞூ புரட்டாசி மீ 4 வ செவ்வாய்க் கிழமையும் பிரதமையும் அத்த நட்சத் திரமும் கூடின நாளில் நேமிநாதம் எழுதி முகித் தேன். சங்கத் தமிழை அனுசரிக்கும் மகாவித்வ |

| வ. எண். | ACC No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | | சனங்களுக்குத் தொண்டு செய்யும் நெல்லை நாயகம். |
| 84. | 3183 | புத்தமித்திரனார் வீரசோழியம். | உரையுடன் கூடியது. ஏடுகள் மிகவும் சிதிலமாயுள்ளன. |
| 85. | 3044 | பவணந்தி முனிவர் நன்னூல் மூலம் முதலியன | இத் தொகுதியில் (1) நம்பியகப் பொருள் விளக்கம் (2) கிரந்த எழுத்தில் அமைந்த நூல் (3) யாப்பருங்கல மூலம் ஆகியன உள்ளன. |
| 86. | 3103 | பவணந்தி முனிவர் நன்னூல் மூலம் முதலியன. ஏடுகள் நல்லநிலை. | இத் தொகுதியில் (1) காரிகை மூலம் (2) அகப்பொருள் மூலம் (3) சிதம்பரப் பாட்டியல் (4) அபிதானப் பொருத்தப் பாட்டியல் (5) சம்பந்தப் பொருத்தப் பாட்டியல் (6) இரத்தினச் சுருக்கம் (7) பன்னிரு பாட்டியல் (8) கொலை மறுத்தல் (9) வருஷப் பிறப்பு முதலிய நூல்கள் உள்ளன. ஒவ்வொரு நூலுக்கும் ஏடு வரிசை எண் தனித்தனியே தரப்பட்டுள்ளது. |
| 87. | 3104 | பவணந்தி முனிவர் நன்னூல். ஏடுகள் 143 நல்லநிலை. | மயிலைநாதர் உரையுடன் கூடியது. உரைமுழுமையும் உண்டு. |
| 88. | 3136 | பவணந்தி முனிவர் நன்னூல் அபூர்த்தி. ஏடுகள் 179. | சங்கர நமச்சிவாயர் உரையுடன் கூடியது. இறுதியில் சில ஏடுகள் சிதிலம். உரியியல் குறை. |
| 89. | 3240 | பவணந்தி முனிவர் நன்னூல் விருத்தியுரை பூர்த்தி. ஏடுகள் 241 | இறுதியில் 'நன்னூல் முகிழ்ந்தது முற்றும்' என எழுதப்பட்டுள்ளது. |

| வ. எண். | ACC No. | ஆசிரியர் நூல் விவரம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| | | நல்லநிலை (கி. பி. 1682). | 857ஆ வைகாசி மீ 31உ திங்கட்கிழமையும் புனர் பூச நட்சத்திரமும் திரிதி கையும்அன்று முகிழ்ந்தது. |
| 90. | 3124 | பவணந்தி முனிவர் நன்னூல் விருத்தியுரை பூர்த்தி ஏடுகள் 328 சுமார்(கி. பி. 1840) | 1015ஆ ஆனிமீ 11உ மங்கள வாரம் ரோகிணிநட்சத்திரத் திரத்தில் சிங்கலக்கினத்தில் எழுதியசுவடி.திருக்கோளூர் ராமசெய கவிராசரவர்கள் புத்திரன் சுப்பிரமணியன் கவிராசன் நன்னூல் பொஸ் தகம் நீடூழி காலம் வாழ்ந் திருக்க. |
| 91. | 3164 | அமிதசாகரர் யாப் பருங்கலக் காரிகை பூர்த்தி. | உரையுடன் உள்ளது. ஏடு கள் சிதிலம். |
| 92. | 3020 | அமிதசாகரர் யாப் பருங்கலக் காரிகை பூர்த்தி ஏடுகள் 1-66 நல்லநிலை. | உரையுடன் உள்ளது. |
| | 3020A | தண்டியலங்காரம் பூர்த்தி. ஏடுகள் 67-170 நல்லநிலை. | உரையுடன் உள்ளது. |
| 93. | 3081 | தண்டியலங்காரம் பூர்த்தி. ஏடுகள் 105 மிகவும் சிதிலம் (கி. பி. 1689). | 864ஆ விகாரிஆ சித்திரைமீ 28உ ஞாயிற்றுக் கிழமை சதுர்த்தி நாழிகையில் மூல நட்சததிர நாளில் சிவ நாம யோகம்... |
| | 3081A | சிறுபஞ்சமூலம் ஏடுகள் சிதிலம். | நூலும் இத்தொகுதியுள் உள் ளது. பூர்த்தி. உரையுடன் கூடியது. |
| 94. | 3089 | தண்டியலங்காரம் அபூர்த்தி. ஏடுகள் நல்லநிலை. | முதலில் தண்டியலங்கார மூலம் முழுதும் எழுதப் பட்டுள்ளது. (ஏடுகள் :6) |

